[12th November 1965

(உ) ஏழாயிரத்து நானூற்று நாற்பத்தாறு (7,446) மரங்கள்.

(எ) ஒன்பதாயிரத்து இருநூறு ரூபாய் (ரூ. 9,200).

(ஏ) மூங்கில் மரங்களும் புதர்ச் செடிகளும் மண்டிக் கிடக்கும் பெருஞ் சாணை நீர்ப்பரப்புப் பகுதியில் 4—3—1965-ல் தீப் பிடித்தது. அன்றிரவு தீ அணைக்கப்பட்டு விட்டது. அங்கிருந்து சில தணல் துண்டுகள் காற்றில் ரப்பர்த் தோட்டத்திற்குள் அடித்துச் செல்லப்பட்டிருக்கவேண்டும். இதனால் 5—3—1965 விடியற்காலையில் ரப்பர்த் தோட்டத்திற்குள் தீப் பிடித்திருக்கவேண்டும். 6—3—1965-ல் ஏற்பட்ட தீ விபத்திற்கு யாரோ சிலருடைய குறும்புத்தனமே காரணமாயிருக்க வேண்டுமெனச் சந்தேகிக்கப் படுகிறது.

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** ஏழாயிரம் மரங்களுக்குத் தீப் பிடித்ததாகவும் சேதம் 9,000 ரூபாய் அளவிற்கு ஏற்பட்டதாகவும் சொல்லப்பட்டது. மரம் ஒன்றின் விலையே 5 ரூபாய்க்குக் குறைவில்லாமல் இருக்கிறது. எனவே சேதம் குறைத்து மதிப்பிடப் பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன்.

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சேதம் குறைத்து மதிப்பிடப்படவில்லை. எல்லா மரங்களும் ஒரேயடியாக எரிந்து கருகிப் போய்விடவில்லை. ஆங்காங்கே பல மரங்கள் முழுவதும் தீயால் பாதிக்கப்படாமல் இருந்தன. எனவே இந்த மாதிரியான கணக்கு வந்திருக்கிறது. எல்லா மரங்களும் ஒரேயடியாக எரிந்து கருகிப் போயிருந்தால் கனம் அங்கத்தினர் கூறுவது சரியாக இருக்கும்.

*Rubber Plantations*

* 213 *Q.*—Sri M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether there is any proposal to deforest the existing 5,000 acres of forests and to convert them into rubber plantations; and

(*b*) if so, the stage at which the matter now stands ?

The Hon. Sri N. S. S. MANRADIAR : (*a*) At present there is no such proposal.

(*b*) Does not arise.

*Rubber cultivation*

* 214 *Q.*—Sri M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) the extent of lands brought under rubber cultivation in Kanyakumari district; and

(*b*) the expenditure incurred year-wise from the planting stage to the final stage, per acre?